# பொருளடக்கம்

## முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் துவக்கம். அகிலத்திற்கோர் அருள் பிழம்பாய் அவதரித்த அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தினர்கள், தோழர்கள், இறைநேசர்கள், அனைவர்களின் மீதும் கருணையும் ஈடேற்றமும் உண்டாவதாக.

அவ்லியாக்களின் கராமத் எனும் அற்புதங்களை மறுக்கும் சிலர் தற்காலத்தில் மடைமைத்தனமாக

அவ்லியாக்கள் எனும் இறைநேசர்களை விட அந்தஸ்த்தில் உயர்வான நபித்தோழர்களிடம் எந்த அற்புதங்களும் நிகழவில்லை. அவ்வாறிருக்க இறைநேசர்களிடம் அற்புதங்கள் எனும் கராமத் எப்படி நிகழும் என்று கேள்வி எழுப்புகின்றனர்.

இவர்களின் கருத்து முற்றிலும் தவறானது. மார்க்கத்திற்கு முரணானது என்பதைப்பற்றி தெளிவாக விளக்கிடவே இந்நூலை தொகுத்து உள்ளோம்.

இதன் மூலம் இந்த மடையர்கள் தனது தவறான கருத்தை மாற்றி இஸ்லாத்தின் அடிப்படைகளை புரிந்து அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத் கொள்கை கோட்பாடுகளின் படி நடப்பதற்கு இறைவன் அருள் புரிவானாக. ஆமீன்.

மௌலவி. ஜவ்ஹர் காதிரி,
வெளியீடு: ஸூபி அகாடமி.

# பொருளடக்கம்

# நபித்தோழர்களின் அற்புதங்கள்

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

## ஹழ்ரத் அமீருல் முஃமினீன் அண்ணல் அபூபக்ர் சித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கராமத் எனும் அற்புதங்கள் கர்பத்தில் யார்?

அண்ணல் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அன்னயைர் திலகம். ஹழ்ரத் ஆயிஷா சித்தீகா ரழியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு தமது செல்வத்தில் 20 வஸக் அளவு பேரிச்சம்பழங்களை அளித்தனர். அதை அன்னையார் பெறும் முன்பே ஹழ்ரத் அபூபக்ர் அவர்களுக்கு மரண நேரம் நெருங்கியது அப்போது அவர்கள் அன்னையாரை அழைத்து நான் தங்களுக்கு கொடுத்த 20 வஸக் பேரிச்சம்பழங்கள் இன்னும் என் வசமே உள்ளது. என் மரணத்திற்குப்பின் அதனையும் சேர்த்து என் சொத்தை இரு ஆண்மக்களுக்கும், உங்களோடு உள்ள இரு பெண் சகோதரிகளுக்கும் (மூவருக்கும்) ஷரீஅத் முறைப்படி பங்கீடு செய்ய வேண்டும் என்று கூறினர். அப்போது அன்னையார் தந்தையே. தங்களுக்கு நானும், அஸ்மா (ரழியல்லாஹு அன்ஹுமா) அவர்களுமாக இரு பெண்பிள்ளைகள் தானே? மூன்று பெண்மக்கள் என்கிறீர்களே? என்று கேட்டனர். அதற்கு ஹழ்ரத் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள். கர்ப்பமுற்றுள்ள உம் தாயார் பெண் பெள்ளை பெறுவார் என்று கூறினர்கள். அண்ணல் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியது போலவே அவர்களின் துணைவியார் பெண்மகவைப் பெற்றார்கள். தாரீகுல் குலபா, சுயூத்தி.

<u>குறிப்பு:</u> மேலே நாம் கண்ட அண்ணல் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கராமத். மறைவான ஞானத்திலேயே உச்சகட்டமான 5 விஷயங்களில் ஒன்றான கர்பத்திலுள்ளதை (எவ்வித கருவியுமின்றி) அறியும் மறைவான ஞானமாகும்.



# பொருளடக்கம்



## அற்புத விருந்து

அன்னாரின் மகனார் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் ரழியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள்.

ஹழ்ரத் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் இல்லத்திற்கு மூன்று விருந்தாளிகள் வந்திருந்தனர். அந்நேரம் அன்னார் பெருமானார் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் திருச் சமூகத்தில் நீண்ட நேரம் இருந்துவிட்டு வீட்டிற்கு தாமதமாகத்தான் வந்தார்கள். வந்ததும் விருந்தினர் வந்திருப்பதைக் கூற அவர்களுக்கு உணவை அனுப்பி வைத்தீர்களா? என தங்களின் மனைவியாரிடம் வினவினார்கள். அதற்கவர்கள். தாங்கள் வராது உண்ணமாட்டோம் என்று விருந்தினர் கூறி விட்டனர் என்றனர்கள். பிறகு அண்ணல் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் வந்த விருந்தினருக்கு உணவைக் கொண்டு சென்றனர். அவர்களும் மிக திருப்தியாக சாப்பிட்டனர். பின்பும் உணவு குறையாமல் அப்படியே இருந்தது. பின் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் குடும்பத்தினரும் சாப்பிட்டனர். அப்போதும் குறையவில்லை. பின் பெருமானாரின் சமூகத்திற்கு கொண்டு செல்லப்பட்டு அங்கிருந்த அனைவருமே சாப்பிட்டார்கள்.

(நூல் புகாரி, முஸ்லிம்)

## மரணத்தை அறிவித்த மாமேதை

ஹழ்ரத் சய்யிதுனா அமீருல் முஃமினீன் அபூபக்ர் சித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது இறுதிநாட்களில் நோயுற்றபோது மரண நாள் வந்தபோது இன்று என் சொத்துக்கள் வாரிசுகளுக்கு உரிமையாகப் போகிறது என்று கூறி தான் இன்று மரணிக்கப்போகிறேன் என்பதை உணர்த்தினர்கள்.

தபகாத்

## சத்தியவானின் வாக்கை சத்தியமாக்கிய ரப்பு

உம்மு சுலைம் ரழியல்லாஹு அன்ஹா அறிவிக்கிறார்கள். ஒரு அன்சாரிப்பெண் நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களிடம் வந்து யாரசூலல்லாஹ்! என் கணவர் வெளியூர்



# பொருளடக்கம்



பயணம் சென்றுள்ள நிலையில் என் வீட்டுப் பேரிச்ச மரம் அடியோடு சாயக்கனாக் கண்டேன் என்றார். அதற்கு நாயகம் நீர் பொறுமை கொள்ளும். அல்லாஹ் உம்மை உம் கணவரோடு மறுமை நாளில் சேர்த்தருள்வான் என்றார்கள். இது கேட்ட அப்பெண் அழுதவாறு வீட்டிற்குத் திரும்பினார். போகும் வழியில் அண்ணல் அபூபக்ர் ரழியல்லாஹுஅன்ஹு அவர்கள் . எதிரே வர அப்பெண் அன்னாரிடமும் தான் கண்ட கனவைக் கூறினர். ஆனால் (அல்லாஹ்வுடைய நாட்டம் பாருங்கள்) அப்பெண் இதை தாம் பெருமானாரிடம் தெரிவித்து அவர்கள் பொறுமை காக்கும்படி கூறியதை ஹழ்ரத் அபூபக்ர் அவர்களிடம் கூறவில்லை. அதுகேட்ட ஹழ்ரத் அபூபக்ர் அவர்கள்.இது (துர்கனவென்று) கூறி கவலைப்படாதீர். இன்று உம் கணவர் வீடு திரும்பி விடுவார் என்று கூறினார்கள். இரவானது.. ஹழ்ரத் அபூபக்ர் ரழியல்லாஹுஅன்ஹு அவர்கள் கூறியது மெய்யானது. அப்பெண்ணின் கணவர் வீடு திரும்பி விட்டார். பின் அவர் காலை பெருமானாரின் சமூகத்திற்கு வர அன்னார் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். உடனே ஹழ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் வந்து நடந்ததைக் கூறி ஹழ்ரத் சித்தீக் நாயகத்தின் வாக்கை அல்லாஹ் பொய்யாக்கிட விரும்பவில்லை என்று கூறினர்.

நுஜ்ஹத்தில் அல்லாமா சஃபூரி.

## அன்னாரின் பணிவிடையில் ஆண்டவனின் மலக்குகள்

ஹழ்ரத் ஹுதைஃபா ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள். ஒருமுறை பெருமானார் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் சுபுஹ் தொழுது முடித்தபின் ஹழ்ரத் அபூபக்ர் எங்கே? என்று வினவினார்கள். அதற்கவர்கள் யாரசூல்லாஹ்! நான் இங்கு தான் இருக்கிறேன் என்றனர்கள். அப்போது தாங்கள் முதல் ரக்அத்திலேயே என்னோடு இணைந்து தொழுதீர்களா? என நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்கள் வினவ நாயகமே! நான் முதல் ஆரம்பத்திலேயே வந்து சேர்ந்து விட்டேன். தாங்கள் முதல் ரக் அத்தில் கிராஅத் ஓதிக் கொண்டிருந்த போது எனக்கு ஒளு



# பொருளடக்கம்



இல்லாதது போல் சந்தேகம் ஏற்பட்டது. உடனே நான் ஒளு செய்திடச் சென்றேன். அங்கு அபூபக்ர்! இப்பக்கமாக பாருங்கள் என்று அசரீரி வந்தது. அங்கு தங்கத்தால் வேலைப்பாடு கொண்ட கண்ணாடிக் குடுவையில் தெளிந்த மணமான தண்ணீர் இருந்தது. அக்குடுவையில் "லா இலாஹ இல்லல்லாஹ் முஹம் மதுர் ரசூலுல்லாஹ் அபூபக்ர் சித்தீக் " என எழுதப்பட்டிருந்தது. நான் அதில் ஒளு செய்தேன். பின் அருகில் ஒரு துண்டு தொங்கிக் கொண்டிருந்தது. அதில் துடைத்துக் கொண்டு வந்து மீண்டும் முதல் ரக் அத்திலேயே ஜமா அத்தில் தங்களோடு சேர்ந்து விட்டேன் என்றனர்கள். அப்போது அண்ணலார் கூறினார்கள். நான் முதல் ரக்அத்தில் கிராஅத் ஓதி முடித்து ருகூஃ செல்ல முயன்றபோது என்னால் முடியவில்லை. என் புஜங்களை இஸ்ராஃபீல் அலைஹிஸ்ஸலாம் பிடித்துக் கொண்டார். தாங்கள் வந்து தொழுகையில் சேர்ந்த பின் தான் என்னை விட்டார்கள். அது மட்டுமல்ல தங்களுக்கு தண்ணீர் கொணர்ந்தது ஹழ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம். துண்டு கொண்டு வந்தது ஹழ்ரத் மீகாயீல் (அலைஹிஸ்ஸலாம்). என்றும் கூறினார்கள். நுஜ்ஹத்.

## ஹழ்ரத் அமீருல் முஃமினீன் உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கராமத் கப்ரில் இருந்து பதில்

ஹழ்ரத் சய்யிதுனா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு முறை மதீனா ஷரீஃபின் பகீஃ கப்ருஸ்தானுக்குச் சென்று.. அஸ்ஸலாமு அலைக்கும் கப்ர்வாசிகளே இதோ எம் செய்தி உங்களின் மரணத்திற்குப் பின் உங்கள் மனைவியர் வேறு மணம் முடித்துக் கொண்டனர். உங்கள் வீடுகளில் செல்வங்கள் இப்போது உங்களுடையதல்ல. அவை பங்கிடப்பட்டு விட்டன என்று கூறினர்கள். அப்போது கப்ரிலிருந்து பதில் வந்தது. இதோ எம் செய்தி. நாங்கள் செய்த சதகா. நற்காரியங்களின் பலனை நான் பெற்றுக் கொண்டோம். எங்களின் மறுமைச் சேமிப்பு எங்களுக்கு



பலனளித்தது. நாங்கள் உலகில் வந்த செல்வங்கள் எங்களுக்கு நஷ்டம் விளைவித்தது.

அவ்வாறு இன்னொரு முறை ஒரு வாலிபரின் மண்ணறையருகில் சென்று சகோதரா குர்ஆன் ஷரீஃப்பறை சாற்றுகிறது. எவர் அல்லாஹ்வை அஞ்சி அனைத்துப் பாவங்களையும் தவிர்ந்து கொண்டாரோ அல்லாஹ் அவருக்கு இரு சுவனபதிகளை வழங்குவான் என்றார்கள். அதற்கு அம்மண்ணறையிலிருந்து அந்த வாலிபர் பதில் கூறினார். அமீருல் முஃமினீன் அவர்களே. அது சத்தியமே.

## ஓ சாரியா!

ஹழ்ரத் உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜனாதிபதியாக வீற்றிருந்து செங்கோலாட்சி நடத்தி வந்த காலை அன்னாரின் உத்தரவின் பேரில் ஹழ்ரத் சாரியா ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையில் ஒரு படை பாரசீகம் சென்றது. ஒரு வெள்ளிக்கிழமை. அங்கு போர் உக்கிரமாக நடந்து கொண்டிருந்தது இங்கு ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜும்ஆ குத்பா ஓத பிம்பரில் ஏறினார்கள். பெருத்த எதிரிப்படை இஸ்லாமியப் படையினரை திணறடிக்கலாயினர். இஸ்லாமியப்படை தடுமாற ஆரம்பித்தது. அப்போது இங்கு மதீனாவில் குத்பா ஓதிக் கொண்டிருந்த உமர் ரழியல்லாஹு அன்ஹு திடீரென ஓ சாரியா! மலைப்பக்கம் வாரீர் என சப்தமிட்டார்கள். பின் வழமை போல் குத்பா ஓதி முடித்தனர். அங்கு இந்த சப்தத்தைக் கேட்ட சாரியா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மலைப்பக்கம் ஒதுங்கி அங்கிருந்தவாறு போரிட்டு எதிரிகளை மண்ணை கவ்வச் செய்தார்கள்.

இதை தபகாத்தில் பதிவு செய்யும் இமாம் ஸப்கீ ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றார்கள். ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் இருபடைகளும் மோதிக் கொள்ளும் போர்க்காட்சிகளைக் கண்டு இஸ்ஸாமியப் படையை எதிரிகள்

சூழ்ந்து அழித்துவிட முயற்சித்ததைக் கண்டு அவ்வாறு எச்சரிக்கை செய்தார்கள். தபகாத்.

(குறிப்பு: அவ்லியாக்களின் பார்வை என்பது விசாலமானது. அவர்கள் ஒரு இடத்தில் இருந்தும் பல இடத்தைப் பார்ப்பார்கள். எங்கும் தம் குரலை எட்டச் செய்வார்கள். எத்துணை தூர இடங்களுக்கும் நினைத்த மாத்திரத்தில் சென்று வருவார்கள். இது அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய அற்புதம் கராமத் ஆகும்)

## பூமிக்கு உத்தரவு

ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக் காலத்தில் ஒருமுறை பூகம்பம் ஏற்படலானது. பூமி லேசாகக் குலுங்க ஆரம்பித்த போது அன்னார் அல்லாஹ்வைப் புகழ்ந்து தம் சாட்டையால் பூமியை அடித்து நிறுத்து. அமைதி கொள். நான் உன் மீது நீதியை நிலைநாட்டவில்லையா? என்றார்கள். பூமி அடங்கி அமைதியானது.

## நதிக்கு ஆணை

எகிப்தைச் சுற்றிலும் பல நாடுகளின் ஜீவாதாரமாக விளங்கும் வற்றா நைல் நதி முற்காலத்தில் ஒவ்வொரு ஆண்டும் ஒரு கன்னிப் பெண்ணை அதற்காக பலியிடா விட்டால் அது வற்றிப்போய் விடுமாம். அஞ்ஞானத்தை வேறறுத்திட்ட இஸ்லாமிய நல்லாட்சி எகிப்தில் வந்த போது பரந்து விரிந்த அரேபிய துணைக் கண்டங்களின் தன்னிகரற்ற கலீபா ஹழ்ரத் உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு எகிப்து கவர்னர் ஹழ்ரத் அம்ர் பின் ஆஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து ஓலை வந்தது. அதில் "நைல் காய்ந்து விட்டது. அதற்கு கன்னியொருத்தியை அலங்கரித்துப் பலியிட வேண்டுமென மக்கள் கூற தாம் மறுத்து விட்டதாகவும். எனவே மக்கள் ஜீவாதாரம் தேடி வேறு ஊர்களுக்கு, நாடுகளுக்குச் செல்ல எத்தனித்து விட்டனர். ஆகவே தாங்கள் இதற்கு தீர்வு காண வேண்டுமென கோரப்பட்டிருந்தது " அதற்கு ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு பதில் எழுதினார்கள் "தாங்கள் மிகச்



சரியாகச் செய்தீர்கள். இஸ்லாமிய சட்டத்தை நிலை நாட்டினீர்கள். மூட நம்பிக்கைக்கு முடிவு கட்டி விட்டீர்கள். அத்தோடு நான் அனுப்பியுள்ள இந்த காகிதச் சீட்டை நைல் நதியில் போட்டு விடுங்கள்."

அதில் என்ன உள்ளது எனும் ஆர்வத்தில் ஹழ்ரத் அம்ர் பின் ஆஸ் ரழியல்லாஹு அன்ஹு அதனைப் பிரித்துப் பார்த்தனர். அதில் எழுதப்பட்டிருந்தது இது தான். "இக்கடிதம் அமீருல் முஃமினீன் உமரின் தரப்பிலிருந்து பிஸ்ரின் (எகிப்தின்) நைல் நதிக்கு ஹம்து, சலவாத்திற்குப் பின் நைல் நதியே! நீ உன் தரப்பில் ஓடுவதாக இருந்தால் நீ நின்று கொள். இல்லை நீ அல்லாஹ்வினால் ஓட்டப்படுவதாக இருந்தால் உன்னை நடத்தாட்டும்படி அல்லாஹ்வைக் கோருகிறோம்."

இதனை நைல் நதியில் போட்டபின் ஒரே இரவில் 16 கெஜம் நீர்மட்டம் உயர்ந்தது.

இன்று வரை ஹழ்ரத் அமீருல் அவர்களின் கோரிக்கை செயல்படுத்தபட்டுக் கொண்டுள்ளது. தபகாத்.

### விஷம் யாரைக் கொல்லும்?

பாரசீகப் படையால் இஸ்லாமியப் படையின் தாக்குதலை எதிர்கொள்ள முடியவில்லை. ஜனாதிபதி ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொன்று விட்டால் பாரசீகம் தப்பித்து விடும் என்று கருதிய பாரசீக மன்னன் ஹிர்கல் தன் அவையின் முக்கிய மந்திரிப் பிரதானிகளையும், மருத்துவர்களையும் அழைத்து,, உமர் நமக்கு பெரிய தலைவலியாக இருக்கிறார். அவரை சண்டையிட்டு நாம் வெல்லவோ, கொல்லவோ முடியாது. தந்திரமாக ஏதேனும் நஞ்சுட்டித்தான் கொல்ல வேண்டும். எனவே அவர் அதை உண்ணாமல், குடிக்காமல் இறந்த விட வேண்டும். அத்தகைய நஞ்சை தயார் செய்யுங்கள் என்று உத்தரவிட்டார். சில நாட்கள் கடுமையாக முயன்று சுவாசித்தாலே உயிரைக் குடித்து விடும் கொடிய விஷத்தைக் கண்டு பிடித்து அதனை ஒரு கண்ணாடிக்

குடுவையில் அடைத்து மன்னர் ஹிர்கல் முன் சமர்ப்பிக்கப்பட்டது. அதனை மன்னர் ஹிர்கல் தேர்ந்த ஒற்றன் ஒருவனிடம் ஒப்படைத்து இதனை ரகசியமாக மதீனா கொண்டு சென்று ஜனாதிபதி உமரை சாகடிக்க வேண்டும் எனக் கூறினார். அந்த ஒற்றன் அதனைப் பாதுகாப்பாக மதீனா கொண்டு வந்து சேர்த்தான். எவரிடம் பேசினால் மாட்டிக் கொள்வோமோ என அஞ்சி தானே மதீனத்து கலீபாவின் மாளிகையை, அரசவையைத் தேடி அலையனான். ஆனால் அவனால் அரசவையை கண்டு பிடிக்க முடியவில்லை. இறுதியாக வேறு வழியின்றி ஒரு முஸ்லிமிடம் விசாரித்தான்.

இருவரும் உரையாடிக் கொள்கிறார்கள்.

ஒற்றன்: இங்கு கலீபாவின் மாளிகை எங்குள்ளது?

முஸ்லிம்: கலீபாவின் மாளிகை சுவனபதியில் இருக்கிறது.

ஒற்றன் ஆச்சர்யத்துடன்: முஸ்லிம்களிடம் கோட்டை கொத்தளம் எங்குள்ளது?

முஸ்லிம்: முஸ்லிம்களின் கோட்டை வான். தேவை ஏற்படும் போது அங்கிருந்து படைகள் வரும்.

ஒற்றன் மேலும் ஆச்சர்யத்துடன்: இப்போது அமீருல் முஃமினீன் எங்கிருப்பார்கள்?

முஸ்லிம்: அவர்கள் இப்போது ஊருக்கு வெளியே செங்கல் சூளையில் வேலை செய்து கொண்டிருப்பார்கள்.

இது கேட்டு மென்மேலும் ஆச்சர்யமும், குழப்பமும் அடைந்த ஒற்றன்: எதற்காக அமீருல் முஃமினீன் செங்கல் சூளையில் வேலை பார்க்கிறார்கள்?

முஸ்லிம்: சொந்த உழைப்பில் உண்ணவேண்டும் என்பதற்காக

இதையெல்லாம் கேட்டு ஆச்சர்யமும், துணுக்குமுற்றவனாக அந்த ஒற்றன் கலீபா உமர் பாரூக் ரழியல்லாஹு அவர்கள் வேலை செய்யும் இடத்தை விசாரித்துச் சென்றான். அங்கு சென்று விசாரிக்க இவ்வளவு நேரம் வேலை செய்து இப்போது தான் ஓய்வெடுத்துக்

கொண்டிருக்கிறார்கள் என்று ஒரு மரத்தடியைக் காட்டப்பட்டது. அங்கே பரந்த, விரிந்த இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தின் தன்னிகரற்ற, எனக்குப் பின் நபி கிடையாது. ஒருவேளை இருந்தால் அந்த நபித்துவத்திற்கு முற்றிலும் தகுதி படைத்தவர் ஹழ்ரத் உமர் பின் கத்தாப் என நபியவர்களால் பெருமைப்படுத்தப்பட்ட, சத்தியத்தை, நீதியை, ஷரீஅத்தை நிலைநாட்டுவதில் எஃகு போன்ற உறுதி கொண்ட, அதே சமயம் இரக்கம் காட்டுவதில் தென்றல் போல் மிருதுவான குணம் கொண்ட அமீருல் முஃமினீன் ரழியல்லாஹு அன்ஹு வ அன் அஹ்லிஹி அஜ்மஈன். அவர்கள் தலைக்கு செங்கல்லை வைத்து ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பாரசீக மன்னர் ஷிர்கலின் நம்பிக்கைக்குரிய ஒற்றன் இது தான் தருணம் என்று நெருங்குகிறான். ஆனால் அவனால் ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை நோக்கி ஒரு அடி எடுத்து வைக்க முடியவில்லை. பூமி அவனது பாதங்களைப் பிடித்துக் கொள்கிறது. அவனுக்குள் இப்போது பயமும், பீதியும் அதே சமயத்தில் இஸ்லாம் தான் சத்தியம். அந்த மகத்தான சத்தியமார்க்கமே காட்டரபிகள் என வர்ணித்தவர்களை இத்தகைய மாபெரும் அந்தஸ்தில், மகோன்னத ஆட்சியில் வைத்திருக்கிறது என்று உள்ளத்தில் பொறி தட்டுகிறது. ஹழ்ரத் உமர் அவர்களைக் கொல்ல வந்தவர் தன் அசத்தியக் கொள்கைகளைக் கொன்றொழித்தார். பூமி அவருக்கு விடுதலை அளித்தது. அதே சமயம்அன்னாரும் கண் விழித்தனர். தன்னை நோக்கி வந்த ஒற்றனை தன் அருகில் அழைத்தனர். அருகில் வந்தார் என்னை முஸ்லிமாக்குங்கள் என்றார். அன்னார் அவருக்கு கலிமாவைச் சொல்லித் தந்து முஸ்லிமாக்கினர். அத்தோடு அந்த ஒற்றர் தான் வந்த நோக்கத்தைச் சொல்லி அந்த நஞ்சுள்ள கண்ணாடிக்குடுவையையும் முன் வைத்து, அமீருல் முஃமினீன்! தங்களுக்கு கொடிய விரோதிகள் இருந்தால் தாங்கள் இதைப் பயன்படுத்திக் கொள்ளலாம் எனக்கூற எனக்கு என் நப்ஸை (ஆத்மாவை) விட கொடிய எதிரி யாருமில்லை. எனவே என் (தான்

எனும்) நப்ஸைத்தான் கொன்றொழிக்க வேண்டும் என்று கூறியவாறே பிஸ்மில்லாஹ் கூறியவாறு பாட்டிலைத் திறந்து வேகமாக விஷத்தை குடித்து விட்டார்கள்.

குஃப்ர் எனும் நஞ்சோடு, அகிலத்தில் அநீதியை அழித்து, நீதியை நிலைநாட்டிய அமீருல் முஃமினீன் உமர் ஃபாரூக் ரழியல்லாஹுஅன்ஹு அன்னவர்களையே கொல்ல வேண்டுமென விஷம எண்ணத்தோடு வந்தவருக்கே உள்ளத்தில் நிறைந்திருந்த நஞ்செல்லாம் ஈமான் எனும் தேனாகமாறி விட்டிருக்க.

கண்ணாடிக் குடுவையில் இருக்கும் நஞ்சு ஹழ்ரத் உமர் எனும் சஞ்சீவியை என்ன செய்து விட முடியும்?

மஸ்னபீ ஷரீஃப்.

## அல்லாஹ்விற்கு அஞ்சுபவர் உலகிற்கு ஏன் பயப்பட வேண்டும்?

பாரசீக மன்னன் ஹிர்கல் ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொன்றுவிட வேண்டுமென்று பல வழிகளில் முயன்று தோற்றான். அப்படித்தான் ஒரு முறை ஒரு மாவீரனை அனுப்பி ஹழ்ரத் உமர் அவர்களைத் தீர்த்து கட்டிவிடச் சொன்னான். அவ்வீரனும் வந்து தக்க தருணத்தை எதிர்பார்த்து ஹழ்ரத் உமர் அவர்கள் ஓய்வெடுக்கும் ஒரு மரத்தடியைத் தெரிந்து கொண்டு இரவோடு இரவாக அம்மரத்தில் ஏறிக் கொண்டான். ஹழ்ரத் உமர் வழமை போல் வந்து அந்த மரத்தடியில் படுத்துவிட்டனர். சிறிது நேரத்தில் அவ்வீரன் இறங்கி அவர்களை வெட்டிவிட வேண்டுமென நினைத்து எத்தனித்த போது தூரத்திலிருந்து ஒரு பயங்கர மிருகம் ஹழ்ரத் உமர் அவர்களை நோக்கி வந்தது, தன் வேலையை இந்த மிருகமே முடித்து விடும்போல, தனக்கு வேலை மிச்சம் என அவன் கருதிக் கொண்டிருக்கும் போதே வந்த மிருகம் ஹழ்ரத் உமர் அவர்களை வட்டமிட்டது. பாதங்களில் முத்தமிட்டது. மேலே இருந்த அவ்வீரனுக்கு ஆச்சர்யமும், பயமும் அதிகமானது. அப்போது ஒரு அசரீரி வந்தது. உமர் அவர்களே! தாங்கள் அல்லாஹ்விற்கு



அஞ்சுபவர். உலகிற்கு ஏன் பயப்பட வேண்டும்? இது கேட்ட உமர் ரழியல்லாஹு அன்ஹு கண் விழித்தனர். அம்மிருகம் பணிவோடு விடைபெற்றுச் சென்றது. உணர்வு பெற்ற அம்மா வீரர் மரத்திலிருந்து இறங்கினார். இறங்கும் போதே குஃப்ர் எனும் இழி நிலையிலிருந்து ஈமான் எனும் உயர்நிலை நோக்கி ஏறினார். அன்னாரின் புனிதப் பாதங்களை முத்தமிட்டார். (மிருகத்திற்குத் தெரிந்த மரியாதை மனிதனுக்குத் தெரியாவிட்டால் எப்படி?) முஸ்லிமானார்.

இமாம் வாகிதீ ரஹிமஹுல்லாஹ்.

## துயர் துடைக்க வந்த தூயவர்

ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் ஒருமுறை மழையின்றி வறட்சி ஏற்பட்டது. அன்னார் மக்களை அழைத்துக் கொண்டு இஸ்திஸ்கா எனப்படும் மழை வேண்டித் தொழும் தொழுகையை நடத்தினார்கள். பின் தங்களின் மேல்துண்டை வலப்புறத்தை இடப்புறமாகவும், இடது பக்கத்தை வலது பக்கமாகவும் மாற்றிப் போட்டுக் கொண்டனர். பின் கைகளை ஏந்தி இறைவனிடம் இறைஞ்சினர். உடனே மழை பெய்ய ஆரம்பித்தது. அந்நேரத்தில் அங்கிருந்தோர் தவிர தூர, தூரக் காடுகளில் தோட்டங்களில் சிலர் இருந்தனர். அவர்கள் பின் மதீனா நகர் வந்தபோது ஹழ்ரத் உமர் அவர்கள் இஸ்திஸ்கா தொழ வைத்து துஆ செய்த அந்த நாளையும், நேரத்தையும் குறிப்பிட்டு.. அப்போது நாங்கள் எங்கள் தோட்டங்களில் இருந்தோம். திடீரென ஒரு மழைமேகம். அதிலிருந்து “உங்களின் துயர் துடைக்க அபூஹப்ஸ் (ஹழ்ரத் உமர்) வந்து விட்டார்கள் ” என்று தொடர்ந்து சப்தம் வந்தது.

இஜாலதுல் கஃபாவில் ஷாஹ் வலிய்யுல்லாஹ் ரஹிமஹுல்லாஹ்.



## ஹழ்ரத் உமரின் மறைவான ஞானம்

யமனில் அஸ்வத் பின் கைஸ் என்பவன் தன்னை நபி என தஃவா செய்து வந்தான். அதனை அபூ முஸ்லிம் கூலானீ ரழியல்லாஹு அன்ஹு நிராகரிப்புச் செய்தனர். அஸ்வத் அபூமுஸ்லிம் அவர்களிடம். நீர் முஹம்மத்தை நபி என்கிறீரா? எனக் கேட்டான். அதற்கவர்கள். நிச்சயமாக (முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அன்னவர்களே நபியாக, மெய்த்திருத்தூதராக உள்ளனர்) என்றனர்கள்.

சினங்கொண்ட அஸ்வத் நம்ரூத் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம் அவர்களை நெருப்பில் போட்டதைப் போல அபூ முஸ்லிம் அவர்களையும் நெருப்பில் போட்டான். ஆனால் நெருப்பு அபூ முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கரிக்கவில்லை. வேறு வழியில்லாமல் அஸ்வத் அவர்களை நாடு கடத்தினான். ஹழ்ரத் அபூ முஸ்லிம் அவர்கள் மதீனா தய்யிபா வந்தடைந்தனர். நேராக மஸ்ஜிதுந் நபவிக்கு வந்தனர். அப்போது ஹழ்ரத் சய்யிதுனா உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினர். இஸ்லாமியச் சகோதரர்களே. இவர் உங்கள் சகோதரர். இவரை பொய்யன் அஸ்வத் நெருப்பில் போட்டான். அல்லாஹ் அபூ முஸ்லிம் அவர்களை நெருப்பிலிருந்து காத்தான். ஆனால் இத்தனைக்கும் இதுவரை ஹழ்ரத் உமர் அவர்களோ, முஸ்லிம்களில் எவருமோ அபூ முஸ்லிம் அவர்களைப் பார்த்ததில்லை. பிறகு அபூ முஸ்லிம் அவர்களுடன் ஆலிங்கனம் செய்து தாங்கள் (தங்களின் மெய்ப்பெயர்) அப்துல்லாஹ் இப்னு சவ்ப் தானே என்றனர். அதற்கு அபூ முஸ்லிம் ஆம் என்றார்கள். பின் கண்ணீர் மல்க ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்தனர். பின் அல்லாஹு சுபுஹானஹு வதஆலா எனக்கு உலகிலேயே. ஹழ்ரத் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அன்னவர்களின் உம்மத்தில் நின்றும் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் போன்ற துணிச்சல்



# பொருளடக்கம்



கொண்ட அன்னவர்களைப் போலவே நெருப்பில் போடப் பட்டவரைக்காட்டி விட்டான். என்றனர்கள்.

இஜாலதுல் கஃபாவில் ஷாஹ் வலிய்யுல்லாஹ்
ரஹிமஹுல்லாஹ்

## உள்ளத்தில் உள்ளதை அறிந்த உமர் ரழியல்லாஹு அன்ஹு

ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு ஒரு கிராமவாசி மலையிலிருந்து இறங்கி வரக் கண்டனர்கள். அப்போது கூறினார்கள். அவர் தன் இறந்த பச்சிளங்குழந்தையை அங்கு அடக்கம் செய்து விட்டு வருகிறார். அத்தோடு ஒரு இறங்கற்பாவையும் மனதில் எண்ணியவாறு வருகிறார். அவர் கீழே வந்ததும் ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள். எங்கிருந்து வருகிறீர்? என்றனர். அக்கிராமவாசி நான் மலையிலிருந்து வருகிறேன் என்றார். என்ன செய்து விட்டு வருகிறீர் என்றதும் நான் ஒரு அமானிதத்தை ஒப்படைத்து விட்டு வருகிறேன் என்றார். அது என்ன அமானிதம்? என்றதற்கு இறந்த என் குழந்தை என்றார். சரி. நீர் உம் குழந்தையின் பிரிவால் பாடிய (மர்ஸியா எனும்) இறங்கற்பாவை பாடிக்காட்டு. என்றனர். அதற்கவர் அமீருல் முஃமினீன்! அல்லாஹ்வின் மீதாணையாக! அதனை நான் இன்னும் மொழியக் கூட இல்லை. உள்ளத்தில் தான் எண்ணியிருந்தேன். (மனதில் தான் பாடிக் கொண்டிருந்தேன் என்று கூறிவிட்டு அந்த இறங்கற்பாவை வாசித்தார்.

இஜாலதுல் கஃபாவில் ஷாஹ் வலிய்யுல்லாஹ்
ரஹிமஹுல்லாஹ்

# பொருளடக்கம்



- இது போன்ற சம்பவங்கள் ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு போன்ற விலாயத் வேந்தர்களுக்கு உள்ளத்தில் உள்ளவற்றையும் அறியும் மறைவான ஞானம் உண்டு என்பதனைக் காட்டுகிறது.

## நீரும் அறியும் நீதிவான்

அமீருல் முஃமினீன் சய்யிதுனா உமர் பின் கத்தாப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்ரா நகரங்களின் பால் ஹழ்ரத் ஸஃதுபின் அபீவக்காஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தலைமையில், ஹழ்ரத் காலித் பின் வலீத் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வழிநடத்தலில் ஒரு படையை அனுப்பி வைத்தனர்கள். வழியில் திஜ்லா நதி குறுக்கிட்டது. அதனைக் கடக்க படகுபோன்ற எதுவும் கிட்டவில்லை. ஹழ்ரத் ஸஃது, ஹழ்ரத் காலித் (ரழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரும் நதியை நெருங்கி வந்து. திஜ்லா நதியே! நிச்சயமாக நீ அல்லாஹ்வின் ஆணையால் ஓடிக் கொண்டிருக்கிறாய். ஆகவே எங்களின் தலைவர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அன்னவர்களின் உயர்மையை, அந்தஸ்தை, மகத்துவத்தை, கண்ணியத்தை அறிந்தால் எங்களின் கலீபா ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தன்னிகரற்ற நீதத்தை நீ அறிந்தால் எங்களுக்கு வழி விடு என்ற கூறிவிட்டு திஜ்லா நதி நீருக்குமேல் நடந்தும், வாகனித்தும் படையினர் அனைவரும் திஜ்லா நதியை தரையில் நடப்பதைப் போல கடந்து சென்றனர்.

இஜாலதுல் கஃபா.

## அண்ணலாரின் இடத்தில் அண்ணலாரின் கலீபா

ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு கனவு காண்கிறார்கள். அதில் சுபுஹ் தொழுகையை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களுடன் நிறைவேற்றிவிட்டு பின் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்கள் மிஹ்ராபில் சாய்ந்து அமர்கின்றனர். ஒரு சிறுமி பேரிச்சம்பழக்கூடையைக் கொண்டு வருகிறார். அதில் ஒன்றை நாயகம் எடுத்துக் கொண்டு ஹழ்ரத் அலி



அவர்களை அழைத்து அவர்களுக்கு ஒன்றை உண்ண ஊட்டுகிறார்கள். பின் பெருமானார் இன்னொன்று உண்ணக் கொடுக்கிறார்கள். ஹழ்ரத் அலி அதனையும் உண்கிறார்கள். பிறகு ஹழ்ரத் அலியார் விழித்து விடுகிறார்கள். பேரிச்சம்பழத்தின் சுவை நாவில் தேனாய் தித்தித்துக் கொண்டிருக்கிறது. பிறகு எழுந்து ஒளு செய்து பள்ளிக்குத் தொழச் செல்கின்றார்கள். ஹழ்ரத் உமர் பாரூக்ஃ ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்குப் பின்னால் தொழுகையை நிறைவேற்றுகிறார்கள். தொழுது முடிந்த பின் கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மிஹ்ராபில் சாய்ந்து உட்காருகிறார்கள். ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் கனவை சொல்லவேண்டும் என நினைக்கும் போதே ஒரு சிறுமி பேரிச்சம்பழக் கூடையுடன் வருகிறார். அதிலிருந்து கலீபா ஒன்றை எடுத்து ஒன்றை ஹழ்ரத் அலியாரை அழைத்து ஹழ்ரத் அலியாருக்கு உண்ண ஊட்டுகின்றனர். பின் கலீபா இன்னொன்றையும் உண்ணக் கொடுக்கின்றனர். ஹழ்ரத் அலி அதனையும் உண்கிறார்கள். பின்பு மற்ற தோழர்களுக்கு பங்கிட்டு வழங்குகிறார்கள். அப்போது ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு மேலும் சாப்பிட வேண்டுமென ஆசை மனதில் தோன்றுகிறது. அது கண்ட ஹழ்ரத் உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹழ்ரத் அலியாரை நோக்கி இரவில் தாங்கள் கண்ட கனவில் நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்கள் தங்களுக்கு இரண்டு தானே வழங்கினார்கள். ஆகவே தான் நானும் இரண்டு வழங்கினேன். அண்ணலார் அதிகம் வழங்கியிருந்தால் நானும் அதிகம் வழங்கியிருப்பேன் என்றார்கள்.

இஜாலுதுல் கஃபா.

- ஹழ்ரத் அலியாரின் கனவில் நடந்ததை, கல்பில் உதித்ததையும் ஹழ்ரத் உமர் அறிந்து கொண்டது எப்பேர்ப்பட்ட ஞானம்?!

# பொருளடக்கம்



### காட்டில் கலீஃபா

ஒரு அன்னிய நாட்டு காஃபிர் மதீனா வந்து கலீபா அவர்களை விசாரித்தான். அப்போது மதிய நேரம். அவர்கள் காட்டில் இருப்பார்கள் என்று சொல்லப்பட்டது. அவனும் விசாரித்து காட்டுக்கு வந்து விட்டான். அங்கு கலீபா அவர்கள் தனிமையில் வெற்றுத்தரையில் தலைக்கு சாட்டையை வைத்துக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தார்கள்.

இந்த தருணத்தைப் பயன்படுத்தி கலீபாவைக் கொன்று விடலாம் என வாளை உருவி நெருங்கினான். திடீரென கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் இரு பக்கமிருந்தும் இரு சிங்கங்கள் கர்ஜித்தவாறு இவனை நோக்கி வந்தன. அப்போது ஹழ்ரத் உமர் விழித்து விட்டார்கள். சிங்கங்கள் மாயமாய் மறைந்தன. உண்மையை உணர்ந்து கொண்ட அந்த காஃபிர் நடந்ததைக் கூறி ஈமான் கொண்டு முஸ்லிமாகி சிறப்புப் பெற்றார்.

கஷ்ஃபுல் மஹ்றூப்.

### நிஜச் சூரியனைச் சுட்ட நீதச் சூரியன்

ஹழ்ரத் உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு முறை தோட்டத்தில் சட்டையின்றி கூடாரமடித்துக் கொண்டிருந்தனர். அக்கடுமையான வெயிற்காலத்தில் அன்னாரின் முதுகில் வெயில்பட்டு கொதிக்கலானது. அப்போது கூடார மடிப்பதில் ஈடுபட்டிருந்த அன்னார் திரும்பி சூரியனை நோக்கி தம் வெப்பப்பார்வையை வீசினார். உடனே அல்லாஹு சுபுஹானஹு வ தஆலா சூரியனின் உஷ்ண ஒளியை உருவி விடும்படி வானவர்களுக்கு உத்தரவிட்டான். உலகம் இருண்டது. நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களுக்கு அல்லாஹ்வின் கோபப்பார்வை பூமியில் பட்டுவிட்டதோ என அச்சமும், கவலையும் உண்டானது. அதே நேரம் ஹழ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வந்து நடந்ததைக் கூறி ஹழ்ரத் உமர் சூரியனை மன்னித்தால்தான் அதற்கு மீண்டும் ஒளி கொடுக்கப்படும் என்று



கூறினார்கள். உடனே ஹழ்ரத் உமர் அழைக்கப்பட்டார்கள். வந்ததும் அன்னாரிடம் அண்ணலார் விஷயத்தைக் கூறிட யாரசூலல்லாஹ்! ஏதோ அந்த நேரத்தில் வெப்பம் தாங்க முடியாமல் கொஞ்சம் கோபத்தோடு பார்த்து விட்டேன். மற்றபடி ஒன்றுமில்லை நாயகமே. நான் மன்னித்து விட்டேன் என்றனர். பின் மீண்டும் அல்லாஹ்வின் உத்தரவு கொண்டு சூரியனுக்கு ஒளி தரப்பட்டது.

ரா அதுல் குலுப்

- அல்லாஹ்வின் நேசர்களின் பார்வைக்கு எவ்வளவு மகத்துவமுண்டு என்பதைப் புரிந்து கொள்கிறோம். இறை நேசர்களின் அருட்பார்வையை அல்லாஹ் நமக்கு நஸீபாக்கு வானாக.

### சத்தியவானிடம் சத்தியம் பேசிய சிலைகள்

ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற புதிதில் அன்னாரின் தோழர் ஒருவர். நீரும் நம் முன்னோர்களின் மதத்தை விட்டு முஸ்லிமாகி விட்டாயாமே என்று வருத்தப்பட்டார். அவரை அழைத்துக்கொண்டு கோயிலுக்குச் சென்ற ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அங்கிருந்த சிலைகளின் பால் விரலை நீட்டி சிலைகளே! பெருமானார் முஹம்மத் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்பதும், இஸ்லாம் சத்திய சன்மார்க்கம் என்பதும், காஃபிர்களின் மதங்கள் அசத்தியம் என்பதும் நிஜமென்றால் அனைவரும் சஜ்தா செய்யுங்கள் என்று கூறினார்கள். உடனே அனைத்து சிலைகளும் சுஜூதில் விழுந்தன. அவற்றில் ஒன்று.. நிச்சயமாக நாயகம் முஹம்மத் ரசூலுல்லாஹி சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் மார்க்கமே சத்தியமாகும். அண்ணலார் மெய்யாக அல்லாஹ்வின் தூதரே. காஃபிர்களின் மதங்கள் அசத்தியமே மேலும் நான் சாட்சியம் கூறுகிறேன் அல்லாஹ்வைத் தவிர இறைவன் இல்லை. மேலும் நான் சாட்சி

பகர்கிறேன் நிச்சயமாக முஹம்மத (சல்லல்லாஹு அலைஹி வ சல்லம்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று கூறியது.

அனீசுல் ஜலீஸில் இமாம் சுயூத்தி ரஹிமஹுல்லாஹ்.

## அமீருல் முஃமினீன் ஹழ்ரத் சையதினா உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கராமத் எனும் அற்புதங்கள்

### ஹழ்ரத் உஸ்மான் அவர்களின் மறைவான ஞானம்

ஒருவர் அன்னாரின் தர்பாரில் கலந்து கொள்வதற்காகச் சென்றார். செல்லும் வழியில் ஒரு அந்நியப் பெண்ணைப் பார்த்தவாறு சென்றார். பின் அன்னாரின் தர்பாரில் கலந்து கொண்டார். அப்போது ஹழ்ரத் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவரைக் குறிப்பிட்டுச் சொல்லாமல் அவர் அத்தவறை மீண்டும் செய்து விடக்கூடாது என்பதற்காக.. உங்களில் தன் கண்களில் விபச்சாரத்தின் தாக்கம் உள்ள நிலையில் ஒருவர் வந்துள்ளார் எனச் சுட்டிக் காட்டினர். அப்போது சம்பந்தப்பட்ட அந்த நபர். அமீருல் முஃமினீன்! நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களுக்குப்பின் மும் வஹீ வருகிறதா? என்ன? எனக் கேட்டார். அதற்கு ஹழ்ரத் அமீருல் முஃமினீன் அவர்கள் இது வஹியல்ல மாறாக அல்லாஹ் ஒரு முஃமினுக்கு வழங்கும் கொடை. சங்கை என்றார்கள்.

- அல்லாஹ்வின் நேசர்களின் ஈமான் குறைவில்லாது நிரப்பமானதாக இருந்தது. எனவே அந்த பூரண ஈமானைக் கொண்டு அவர்களுக்கு மறைவான ஞானம் உண்டானது.

### தன் மரணத்தை அறிந்தவர்கள்

ஹழ்ரத் இமாம் மாலிக் ரஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள். ஹழ்ரத் அமீருல் முஃமினீன் சையதினா உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தங்களின் மரணத்திற்கு ஒருசில நாட்களுக்கு முன் ஜன்னதுல் பகீஃ கப்ருஸ் தானுக்கு ஜியாரத் சென்று விரைவில் இங்கு ஒரு நல்லடியார் அடக்கம் செய்யப்படப்

போகிறார் என்று கூறினார்கள். அதன்பின் அவர்களே அங்கு மரணித்து முதலாக அடக்கம் செய்யப்பட்டார்கள்.

இஜாலுதுல் கஃபா.

- அடுத்து நடக்கப் போவதை அறிவதும், ஒருவர் எங்கு மரணிப்பார் என்பதும் மறைவான ஞானங்களிலேயே உச்சகட்டமானதாக குர்ஆன் கூறும் 5 மறைவான ஞானங்களில் உள்ளவையாகும்.

அதனையும் ஈமான் பூரணமான இறைநேசம் பெற்றோர் பெருமானார் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் அளவிலா ஞானக் கருவூலங்களிலிருந்து பெற்றுக் கொள்கின்றனர்.

- ஹழ்ரத் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அன்னவர்களின் சிறப்புக் குறித்து ஏராளமான ஹதீஸ்கள் உள்ளன. திருமறை வசனங்கள் உள்ளன. அன்னாரை எதிர்த்தவர்கள், கொலை செய்யக்களமிறங்கியவர்கள் எல்லாம் எப்பேர்பட்ட அல்லாஹ்வின் சாபத்திற்கும், கோபத்திற்கும் ஆளாகி அழிந்தனர் என்பதை வரலாறு பேசுகிறது.

சவாயிக் மஹ்றிகா.

- இறை நேசர்களின் கோபத்திலிருந்து அல்லாஹ் நம்மைப் பாதுகாப்பானாக!

## அமீரீன் முஃமினீன் ஹழ்ரத் அலி இப்னு அபூதாலிப் கர்ரமல்லாஹு அவர்களின் அற்புதங்கள்

### கப்ரில் இருந்து பதில்

ஹழ்ரத் சஈத் பின் முஸய்யப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகின்றனர். நாங்கள் சையதினா அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களுடன் மதீனா ஷரீஃபின் கப்ருஸ்தானுக்கு ஜியாரத் சென்றோம். அன்னார் யாஅஹ்லல் குபூர் அஸ்ஸலாமு அலைக்கும் (மண்ணறைவாசிகளே! தங்களின் மீது இறைச் சாந்தி உண்டாகட்டும்) என்றனர். உடனே யாஅமிரல் முஃமினீன்! வ அலைக்குமுஸ்ஸலாம் வ ரஹ்மதுல்லாஹி வ பரகாதுஹு என்று மண்ணறையின் எட்டுத் திக்கிலிருந்தும் சப்தம் வந்தது. பின் ஹழ்ரத்

அலியார் அவர்கள் நாங்கள் எங்கள் செய்திகளைக் கூறட்டுமா? அல்லது நீங்கள் முதலில் உங்கள் செய்திகளைக் கூறுகிறீர்களா? என்றார்கள். உடனே எங்கள் மரணத்திற்குப் பின்னால் நடந்தது என்ன? எனக் கேட்கப்பட்டது. ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கூறினார்கள். உங்கள் மனைவியர் இத்தா முடித்து வேறு திருமணம் செய்து கொண்டனர். உங்களின் செல்வங்கள் வாரிசுகளுக்கு பங்கிடப்பட்டு விட்டன. உங்களின் பிள்ளைகளை யதீம்கள். மிஸ்கீன்களுடைய கணக்கில் சேர்க்கப்பட்டு விட்டது. உங்கள் வீடுகளில் இப்போது யார் யாரோ குடியிருக்கிறார்கள். இதுவே எங்கள் செய்தி. உங்கள் செய்திகளைக் கூறுங்கள் என்றார்கள். ஒரு மண்ணறையிலிருந்து பதில் வந்தது. எங்களின் கஃபன் துணி பழையதாகி விட்டது. முடிகள் உதிர்ந்து, கன்னங்கள் ஒட்டிப் போய் விட்டது. கண்கள் குழி விழுந்துவிட்டது. நாங்கள் மறுமைக்காக சேமித்ததின் பலனை அடைந்தோம். உலகில் விட்டுவிட்டது எங்களுக்கே நஷ்டமே.

- ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஓசாரியா! என குத்பாவில் சப்தமிட்டார்கள். பின் தொழுகை முடிந்து மக்கள் வெளியேறும் போது ஒருவர் ஹழ்ரத் அலியாரிடம் ஏன் கலீபா ஓ சாரியா! என சப்தமிட்டனர்? சாரியா பல மைல்களுக்கு அப்பால் அல்லவா இருக்கிறார் என்றார். அதற்கு ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் முஸ்லிம்களுக்கு வந்த மிகப் பெரிய துயரம் நீங்கி விட்டது என்பதை மட்டும் புரிந்து கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

- பின் ஹழ்ரத் சாரியா வெற்றியோடு திரும்பி நடந்ததைக் கூறிய பின் தான் ஹழ்ரத் உமர் அவர்களும், அலியார் அவர்களும் கூறியதின் அர்த்தம் புரிய வந்தது. அத்தோடு இறைநேசம் பெற்ற விலாயத் பெற்ற நல்லடியார்களின் அந்தஸ்தும், மறைவான



ஞானமும், அவர்கள் துயர் துடைக்கும் தூயவர்களாக விளங்குவதும் நாம் அறிய முடிகிறது.

**அலியாரின் இல்முல்கைப் எனும் மறைவான ஞானம்**

ஹழ்ரத் அஸ்பக் ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள் நாங்கள் ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களோடு ஒரு ப்யணித்தில் இருந்ததோம். இன்று ஹழ்ரத் சையிதினா ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் மண்ணறை இருக்கக்கூடிய இடத்தைக் கடந்து செல்லும் போது ஒவ்வொரு இடத்தையும் காட்டி ஹழ்ரத் அலியார் கூறினார்கள். இங்கு தான் ஒட்டகம் கட்டப்படும். இங்கு தான் கூடாரமடிக்கப்படும். இங்கு தான் அன்னார் ஷஹீதாக்கப்படுவார்கள். இங்கு தான் ஹழ்ரத் முஹம்மத் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் குடும்பத்தினரில் சில வாலிபர்கள் ஷஹீதாக்கப்படுவார்கள். இந்த துர்நிகழ்ச்சி கண்டு வானம், பூமியும் கண்ணீர் வடிக்கும்.

இஜாலதுல் கஃபாவில் ஷாஹ் வலிய்யுல்லாஹ் ரஹிமஹுல்லாஹ்.

- அடுத்து என்ன நடக்கும். யார் எந்த இடத்தில் மரணிப்பார் என்பன போன்ற 5 மறைவான ஞானங்கள் உச்சகட்டமான, மிகப்பெரிய விஷயங்களாக குர்ஆன் ஷரீஃப் பறைசாற்றும் இல்முல்கைபாகும்.

அவற்றை நாயகத்தின் ஞானக் கருவூலங்களிலிருந்து இறைநேசம். விலாயத் பெற்ற மகான்கள் பெற்றுக் கொள்கின்றனர்.

**தன்னைக் கொல்பவனை அறிந்தவர்கள்**

ஷாஹ் வலிய்யுல்லாஹ் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மதுல்லாஹு அலைஹி எழுதுகிறார்கள்.

ஹழ்ரத் சையிதினா அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அன்னவர்கள் இப்னு முல்ஜிமைப் பார்க்கும் போது கூறுவார்களாம். நான் இவர் வாழ வேண்டுமென்று விரும்புகிறேன். இவரோ என்னைக் கொல்ல வேண்டுமென்று ஆசைப்படுகிறார்.



- அன்னார் கூறியது போலவே அவர்கள் இப்னு முல்ஜிமால் ஷஹீதாக்கப்பட்டார்கள். எனினும் அந்த மரணவேளையிலும் இப்னு முல்ஜிமை மன்னித்து தண்டிக்க வேண்டாம் என் கூறிவிட்டார்கள்.

இது தான் மகத்துவம் மிக்க மன்னர் முஹம்மத் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் மரியாதைக்குரிய அஹ்லு பைத்களின் (குடும்பத்தாரின்) குணம்.

## ஹைதர் என்றால் சிங்கமும் நடுங்கும்

அல்லாமா ஸஃபூரி எழுதுகின்றார்கள். ஒரு நண்பர் ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் வந்து நான் காட்டு வழிப் பயணம் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. எனக்கு சிங்கம், புலிகள் பற்றி அச்சமாக இருக்கிறது என முறையிட்டார். அதற்கு ஹழ்ரத் அமீருல் முஃமினீன் அலி அவர்கள் தமது மோதிரத்தைக் கொடுத்து சிங்கம், புலி ஏதேனும் குறுக்கிட்டால் இந்த மோதிரத்தைக் காட்டி இது அலியவர்களின் மோதிரம் எனக் கூறுவீராக என்றார்கள்.

அவ்வாறே வழியில் ஒரு சிங்கம் குறுக்கிட அவர் மோதிரத்தைக் காட்டி இது அமீருல் முஃமினீன் அரபகச் சிங்கம் (ஹைதர்) அலியவர்களுடையது என்று கூற.. அச்சிங்கம் வானத்தை நோக்கியும், பூமியை நோக்கியும், கிழக்கைப் பார்த்தும், மேற்கைப் பார்த்தும கர்ஜித்து விட்டு ஓடி மறைந்தது.

பின் பயணத்தை முடித்து திரும்பி வந்த நண்பர் அச்சிங்கம் ஏன் அவ்வாறு கர்ஜித்தது என்பதை அறிவீர்களா? எனக் கேட்டார். அதற்கு ஞானத்தின் தலைவாயில் அலியார் ரழியல்லாஹு அன்ஹு விடை பகர்ந்தார்கள். அச்சிங்கம் வானை நோக்கி வானில் தன் தர்பாரை அமைத்திட்டவன் மீதானை என்றும் பூமியை நோக்கி புவியை விரித்திட்டவன் மீதாணை என்றும், கிழக்கு நோக்கி சூரியனை வெளியாக்கியவன் மீதாணை என்றும், மேற்கு நோக்கி சூரியனை மறையச் செய்பவன் மீதாணை என்றம் கூறிவிட்டு எங்கே



தன்னைப் பற்றி அமீருல் முஃமினீன் அவர்களிடம் சொல்லப்பட்டு விடுமோவென பயந்து இனிமேல் நான் இந்த ஊரில் இருக்கவே மாட்டேன் என்று கூறியவாறு ஓடிவிட்டது.

## எங்கே ஜிப்ரீல்?

இமாம் நஸஃபீ எழுதுகிறார்கள்?

ஒருமுறை ஹழ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் மனித உருவில் வந்து அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களிடம் இப்போது ஜிப்ரீல் எங்கே இருக்கிறார்? என்று கூறுங்கள் (பார்க்கலாம்) என்றனர். ஹழ்ரத் சையிதினா அலி ரழியல்லாஹு அன்ஹு மேலே வர்னை, பூமியை, அக்கம், பக்கம் பார்த்து விட்டு என் முன்தான் இருக்க வேண்டும் என்றார்கள்.

## உறங்குங்கள் உமரவர்களே!

ஹழ்ரத் சையிதினா அமீருல் முஃமினீன் உமர் பின் கத்தாப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் மரணத்திற்குப்பின் அன்னாரை அடக்கம் செய்யப்பட்ட பின் ஹழ்ரத் அலி கர்மெல்லாஹு வஜ்ஹஹு கப்ரு ஷரீஃப் அருகில் அமர்ந்து கொண்டனர். கப்ரில் கேள்வி கேட்கும் முன்கர், நகீர் வானவர்கள் பயங்கர தோற்றத்துடன் வந்து அன்னாரிடம் கேள்வி கேட்க அன்னாரும் பதிலிறுத்து விட்டனர். நிம்மதியாக புதுமாப்பிள்ளை போல் உறங்குங்கள் என மலக்குகள் கூறிய போது சையிதினா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எப்படி உறங்குவது? நீங்கள் பயங்கர தோற்றத்துடன் இனிமேல் எந்த முஸ்லிமின் கப்ருக்கும் செல்ல மாட்டோம் என எனக்கு வாக்குறுதியளியுங்கள் என்று வாக்குறுதி வாங்கினார்கள் ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள். இதனைக் கேட்டுக் கொண்டிருந்த ஹழ்ரத் அலியார் கூறினார்கள். உள்ளமைதியோடு உறங்குங்கள் அமீருல் முஃமினீன் உமரவர்களே.

- அல்லாஹ்வின் நேசர்கள் மரிப்பதில்லை. எப்போதும் இஸ்லாமிய சமுதாயத்திற்காக பொது நலத்தோடு பாடுபட்டுக் கொண்டுள்ளனர்.
- விலாயத் பெற்ற இறைநேசர்களுக்கு எதுவும் மறைவாக இல்லை.

அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியுள்ள கராமாத் எனும் அற்புதத்தால், அண்ணல் பெருமானார் முஹம்மத் முஸ்தஃபா சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் ஞானக் கருவூலத்திலிருந்து அளவிடமுடியா, அளப்பரிய ஞானங்களைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

- அல்லாஹ் தன் அருளையும், தன் திருத்தூதர் கண்மணி நாயகம் முஹம்மத் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்களின் ஆசியையும், அவன் நேசர்களின் நீங்கா ஆதரவையும் நமக்கு ஈருலகிலும் நிலையாகத் தந்தருள்வானாக.

×××××××××



# பொருளடக்கம்



கேள்வி: அவ்லியாக்களின் கராமத்தையும் அற்புதங்களை மறுக்கும் ஒருவர் அவ்லியாக்களைவிட அந்தஸ்தில் உயர்ந்த சஹாபாக்கள் நபித்தோழர்களிடமே எந்த கராமத்தும் நிகழவில்லை. அவ்வாறிருக்க அவ்லியாக்களின் கராமாத்கள் எங்ஙனம் உண்மையாகும்? என்கிறார். அவருடைய கருத்து கொள்கை பற்றி மார்க்கத்தீர்ப்புக் கூறும் முஃப்திகள், மார்க்க மேதைகளான ஆலிம் பெருமக்கள் என்ன கூறுகிறார்கள்? இதுபற்றி தெள்ளத்தெளிவாக விளக்கவும்.

பதில்: அவ்லியாக்களின், சஹாபாக்களின் கராமாத் எனும் அற்புதங்களை மறுப்பவர் வழிகெட்டவராவர். இது அல்லாஹ், ரசூலை மட்டந்தட்டி, இழிவாகப் பேசியும், எழுதியும் வரக்கூடிய தரங்கெட்ட, வழிகெட்ட வஹ்ஹாபிய தப்லீக், தேவ்பந்தீ மதத்தினரின் கொள்கையாகும்.

வழிகெட்ட தப்லீக், தேவ்பந்த் மதத்தலைவர்களான அஷ்ரப் அலி தானவி, மஹ்மூத் ஹஸன் தேவ்பந்தீ, ஆஷிக் இலாஹி மீரட்டீ, ஃபத்ஹ் முஹம்மத், நஜீர் அஹ்மத், அப்துல் மஜீத் தர்யாபாதீ போன்றோர் தங்கள் திருக்குர்ஆன் மொழி பெயர்ப்புகளில் அல்லாஹ்வை பொய்கூற முடிந்தவனாக கிண்டல் செய்யக்கூடியவன். மோசடி செய்பவன், சூழ்ச்சி செய்பவன், மறதியாளன் என்பன போன்ற இழிந்த குணமுடையவனாகச் சித்தரித்துள்ளனர்.

அந்த வழிகேடர்களின் ஹிப்ளுல் ஈமான் எனும் நூலில் நாயகம் கண்மணி சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் இல்ம் (அறிவு) ஞானத்தை குழந்தைகள், புத்திபேதலித்தவர்களின் அறிவோடு ஒப்பிட்டுப் பேசியுள்ளனர்.

பெருமானாரைவிட (நஊது பில்லாஹ்) சபிக்கப்பட்ட ஷைத்தானின் இல்ம் (அறிவு) விசாலமானது என பராஹீனே காத்திஆ எனும் நூலில் எழுதி வைத்துள்ளனர்.

# பொருளடக்கம்



நாயகத்திற்குப் பிறகு நபியின் வருகை சாத்தியம் என்பதாக தஹ்தீருன் நாஸ் எனும் நூலில் எழுதி வைத்து நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் இறுதி நபி என்பதை மறுத்துள்ளனர்.

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் எனும் போர்வையில் இருந்து கொண்டு தப்லீக், தஃவத் எனும் பெயரில், அவ்வாறே அரபிக்கல்லூரிகளை, போலி கான்காஹ்களை நிறுவி தங்களின் இது போன்ற தீய, வழிகெட்ட வஹ்ஹாபியக் கொள்கைகளை போதித்து அப்பாவி முஸ்லிம்களை வஹ்ஹாபிகளாக மாற்றிக் கொண்டிருக்கிற தப்லீக், தேவ்பந்த் மதத்தினரின் நயவஞ்சகத்தனத்தை, வேஷத்தை உண்மையான அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் உலமாக்கள் தோலுரித்துக் காட்டி அப்பாவி மக்களின் ஈமானைக் காக்க. அவர்கள் ஈமானில்லாத வஹ்ஹாபிகளாக மாறிவிடாமல் பாதுகாக்க பெரும் முயற்சி எடுத்து வருகின்றனர்.

அவ்வகையில் வலிமார்களின் கராமாத்களை , ஏன் நபிமார் களின் முஃஜிஸாக்களைக்கூட மட்டந்தட்டிப் பேசும் தப்லீக், தேவ்பந்த் வழிகேட்டுக் கும்பலுக்கு தக்க பதிலடியாகவும், குழப்பத்தில் உள்ளோருக்கு தெளிவு தரக்கூடியதாகவும், முஸ்லிம் சகோதரர்கள் வழி தவறி விடககூடாதென்பதற்காகவும் அவ்லியாக்களின் அற்புதங்களை விளக்கும் நூல்களுக்கிடையில் அண்ணல் பெருமானார் அஹ்மத் முஸ்தஃபா சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அன்னவர்களின் அகமியம் மிக்க நற்றவத்திருத் தோழர்களின் கராமாத் எனும் அற்புதங்களை விளக்கும் அழகிய நூல்.

அந்த தப்லீக் தேவ்பந்த் மத வழிகேட்டுக் கும்பல் கராமத், முஃஜிஸா பற்றி எப்படி மட்டமாக கருதுகிறார்கள் தெரியுமா?

அந்த வழிகெட்ட வஹ்ஹாபிய மத வழிகேடன் ரஷீத் அஹ்மத் கங்கோஹீ ஃபதாவா கங்கோஹியா எனும் பெயரில் தான் கக்கியுள்ள வாந்தியில் 2 ம் பாகம் 32 ம் பக்கத்தில் எழுதியுள்ளான்.

அல்லாஹ் நேசர்களிடமிருந்து வெளிப்படக்கூடிய (முஃஜிஸா, கராமத் போன்ற) எத்தனையோ பல விஷயங்களை



மக்கள் (பெரிதாக) நினைக்கின்றனர். ஆனால் அந்த (நபிமார்களின்) முஃஜிஸாக்களுக்கு நிகராக, அதனை விட உறுதியும், ஆற்றலும் வாய்ந்ததாக பரிபூரணமான விஷயங்களை மாயாஜாலம் செய்வோரும், பெரும் வித்தைக்காரர்களும், சூனியக்காரர்களும், ஜோசியக்காரர்களும், குறி சொல்வோரும் செய்து விடுகின்றனர்.

மஆதல்லாஹ்! (அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்)

நபிமார்களின் விஷயத்தில் குறை காணுவது. அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய முஃஜிஸாக்கள் எனும் பேரற்புதங்களை கேவலமாகக் கருதுவது, அதனைவிட மந்திர, மாயாஜால, ஜோசியக்காரர்களின் கண்கட்டு வித்தைகளைப் பெரிதென்று போற்றுவது நிச்சயமாக இது வழிகெட்ட, ஈமானில்லாத வஹ்ஹாபியின் நாவிலிருந்தே தவிர உண்மையாக ஈமான் கொண்டுள்ள முஸ்லிம் ஒருவரின் நாவிலிருந்து நிச்சயம் வெளிப்படாது.

சத்தியத்தைச் சொல்ல வேண்டியது நம் கடமை. சிந்திக்க வேண்டியது மக்களின் பொறுப்பு. நேர்வழி தரக்கூடியவன் அல்லாஹு ரப்புல் ஆலமீன்.



# பொருளடக்கம்



தூத்துக்குடி, ஷேக் என்ற
செய்யது முஹம்மது கஸ்ஸாலி
அவர்களின் தந்தையார்
கமர்தீன் என்ற தங்ககண் மரைக்காயர்
மற்றும்
தூத்துக்குடி, பாரூக் ஹாஜியார் அவர்களின்
தாய்,தந்தையர்கள்
அபுஸாலிஹ் & ருக்கையாஜான்
ஆகியோரின்
ஈஸால் ஸவாபிற்காக
இந்நூலை எத்திவைக்கிறோம்.



# பொருளடக்கம்

# நபித்தோழர்களின் அற்புதங்கள்



தொகுப்பாளர் :
மௌலவி **ஐவ்ஹர்** காதிரி

வெளியீடு:
**ஸூஃபி அகாடமி**
தஞ்சை.

# பொருளடக்கம்

## இந்நூல் பற்றி

நூலின் பெயர் : நபித்தோழர்களின் அற்புதங்கள்

மொழி : தமிழ்

நூலின் ஆசிரியர் : மௌலவி
ஜவ்ஹர் காதிரி

வெளியீடு : ஸூபி அகாடமி
தஞ்சை.

குறிப்பு:
அல்லாஹ், ரஸூல் பெயர் இருப்பதால்
யாரும் இந்த நூலை கண்ணியக்குறைவு
செய்ய வேண்டாம்.

## பொருளடக்கம்

# பொருளடக்கம்

## பொருளடக்கம்